சிவன் தன் மூன்றவத்தையிலுந் தன் மூன்று சரீரமாக இருக்கின்ற விருபத்தேழு (தூல சரீரதத்துவம் 6, சூட்சும சரீரதத்துவம் 20, காரண சரீரதத்துவம் 1 ஆக 27.) தத்துவத்துடனும் நானென்று கலந்து நிற்கின்றாற் போல ஈசுரனுந் தன்னுடைய மூன்று சரீரமா யிருக்கின்ற முப்பத்திரண்டு (சமஷ்டி தூலசரீரதத்துவம் 6, சமட்டி சூட்சுமசரீர தத்துவம் 20, இவற்றின் வாசனையுடன் கூடிய காரணசரீரமாகிய மாயை 1, ஆகாயாதிபூதங்கள் 5, ஆக 32.) தத்துவத்துடனும் மூன்றவத்தையிலுங் கலந்து நிற்பன்.

## ஸ்தூலபஞ்சபூதம்.

கக.—(ந-ரை). இந்திரியத்திற்கு விஷயமாகும் பிருதிவியாதி பூதங்கள் ஸ்தூல பஞ்சபூதமாம். பிருதிவி, சலம், தேயு, வாயு, ஆகாசம் என்னும் ஐந்தன்கண்ணும் பூதத்தன்மை யுண்டு. பூதத்தன்மையாவது பகிர் (புற) இந்திரியத்தாற் கிரகிக்க (அறியப்படும் தன்மை.

## விராட்டு.

ஈசுவரனுக்குச் சராசரவடிவப் பிரபஞ்சம் அவயவங்களாக விருத்தலாலே அது விராட்டு என்று சொல்லப்படுகிறது. "சிரந்துறக்கஞ் செவிதிசைக ளிருசுடர்கள் விழிதிப், பாங்காய முகமுந்தி விசும்பு நிலம் பதமாம் பருமனுருவாயவிராட் புருடவடிவெனினும்" என்று வேதாந்த சூளாமணி கூறுவதும், "ஓ சகல சகத்திற்கு மீசனே! ஓ விசுவரூபத்தைத் தரித்திருக்கின்றவரே! அநேகமான கைகள் வயிறுகள் முகங்கள் கண்களை யுடையனவும் அநேக ரூபங்களை யுடையனவுமான உம்மை எவ்விடத்திலும் பார்க்கிறேன்; உம்முடைய ஆதியை நான் காணவில்லை; அப்படியே மத்தியத்தைக் காண வில்லை;

முடிவைக் காணவில்லை" என்று பகவத்கீதை ௧௧-ம் அத்தியாயத்தில் கண்ணனை நோக்கி அருச்சுனன் கூறுவதும் இங்கறியத்தக்கனவாம். விராட் எனினும் விசுவமெனினும் ஒக்கும்.

### வைசுவானரன்.

சகல பிராணிகளின் சரீரத்திலும் நான் என்று அபிமானத்தை வைத்திருக்கின்றதனாலே ஈசுவரனுக்கு வைசுவானரன் என்று பெயர் வந்தது. ஒவ்வொரு பிராணியும் தனது தனது சரீரத்தை நான் என்று அபிமானிப்பது போன்று ஈசுவரன் சகல பிராணிகளின் சரீரத்தையும் நான் என்று அபிமானிக்கிறானென்பது கருத்து. இப்பெயரேயன்றித் தத்பத முக்கியார்த்தன் என்றற் றொடக்கத்தவாய பெயருமுண்டு. பிராணிகளின் சரீரத்தை ஈசுவரன் நான் என்று அபிமானித்தாலும் அப்பிராணிக ளுறுகின்ற சுகதுக்காதி துவந்துவங்களை யடைதலின் றென்பது,

"உன்னுதரத் தேகிடந்த வீடமுறுவ தெல்லா
முன்னுடைய தென்னுய்நீ யுற்றனையோ—மன்னுயிர்க
ளவ்வகையே காணிங் கழிவதுவு மாவதுவுஞ்
செய்வகையே நின்றறிவன் பால்."

என்னும் வெண்பாவின லறிக.

### அதிஷ்டானம்.

விவர்த்தவடிவ காரியத்தின் காரணம் விவர்த்த உபாதானமாம். அதுவே அதிஷ்டான மெனப்படும். கயிற்றிற்கண் விவர்த்தமாய்த் தோன்றிய அரவிற்குக் கயிறு விவர்த்தவுபாதானமாம். கயிறு தனது சொரூபத்தை விடாமலே அரவாகிய வேறு சொரூபத்தைக் காண்பித்தலின் அது விவர்த்த உபாதான (முதற்காரண) மாம். எது (கயிறு) மயக்ககாலத்திற் றோன்றாதிருக்கின்றதோ எதன் (கயிற்றின்)

தோற்றத்தால் மயக்கம் (பாம்பு) நீங்குகின்றதோ அது (கயிறு) அதி வ்ஷ்டானமாம்.

## இரணியகர்ப்பம்.

இந்திரியங்களுக்கு விஷயமாதற்குரிய பொருளைக் கருவாக வுடையது இரணியகர்ப்ப மெனப்படும். ஈசுவரனது சூட்சும சரீரத் துள் ஸ்தூல பூதங்களியாவும் காரணவடிவாக அடங்கி யிருத்தல் பற்றி அது இரணியகர்ப்பம் எனப்பட்டது. இரணியகர்ப்பம் என்ப தற்குப் பொன்னிறமான (முட்டையின்) கருப்பம் என்று பொரு ளாம். "அந்த வித்தானது (பிரகிருதியானது) சர்வேசுவரனுடைய இச்சையினாலே தங்க (பொன்) நிறமான ஒரு அண்ட (முட்டை) மாயிற்று. அவ்வண்டத்தில் முன் ஜனனத்தில் பிரம பட்டத்திற் குத் தக்க தபசு பண்ணின ஒரு சீவனைப் பிரமனாகச் சிருஷ்டித்து அப்பிரமனுக்குள் அந்தரியாமியாய்ப் பிரவேசித்தார்" என்று மனு தரும சாஸ்திரம் கூறுவதுமிங் கறியத்தக்கதாம்.

## சூத்திராத்மா.

எப்பொருள்களையும் தனது சக்தியினால் சூத்திரதாரி (இயந்தி ரக்கயி றுடையவன்) போன்றிருந்து இயங்கச் செய்தலாலே ஈசுவர னுக்குச் சூத்திராத்மா என்று பெயர்வந்தது. "சாட்டையிற் பம்பர சாலம் போலெலா, மாட்டுவா னிறை" என்று தாயுமானவர் கூறுவ திங்குக் கவனிக்கத்தக்கது. சூத்திரம் - பிரதிமைகளை யியங் கச்செய்தற்குக் காரணமான கயிறு. இச்சூத்திரான்மா என்னும் பெயரேயன்றி மாப்பிராணன் என்றற் றொடக்கத்த பெயருமுண்டு.

## அவ்வியாகிருதம்.

மாயையானது பிரமத்தின்கண் அக்கினியிற் சூடுபோன்று (சக்தி வடிவமாய்) பிரிபடாதிருத்தலாலே அவ்வியாகிருதமெனப்பட்டது. வியாகிருதம் - பிரிக்கப்பட்டது. அவ்வியாகிருதம்-பிரிக்கப்படாதது.

### அந்தரியாமி.

மாலையினுட் கயிறுபோன்றும் சதுர்ப்பூதங்களில் வியாபித்து நிற்கும் விண்போன்றும் எல்லாவற்றிற்கும் உள்ளீடாய் நிற்றலைப்பற்றி ஈசுவரனுக்கு அந்தரியாமியென்று பெயர் வந்தது. அந்தர் - உள். அந்தரியாமியென்னும் பெயரேயன்றிக் காரணோபாதிகன், மாயோபாதிகன், ஜகத்யோனி, பரன், பரதேவதை என்றற் றொடக்கத்தவாய பெயர்களுமுண்டு.

அ - கை.

## சீவசேதன முதலியவற்றின் வியாபகத்தைக் கூறல்.

உ௦.—ஆகையினால் சிதாபாசன் தன் சரீரமாத்திரமே கலந்து நிற்பன்.

ஈசுரன் தன்னுடைய சரீரமாகிய சகல சரீரங்களோடுஞ் சகலப் பிரபஞ்சங்களோடுங் கலந்து நிற்பன். இந்த விருவகைக்குஞ் (சிதாபாசனுக்கும் ஈசுவரனுக்கும்) சாட்சியாயிருக்கின்ற பிரம சைதன்யம் சகல சரீரத்திலுஞ் சகலப் பிரபஞ்சத்திலும் நிறைந்து அப்பாலும் பத்துத் திக்கையும் அதிக்கிரமித்து (மீறி) எல்லையற்றிருக்கும்.

### பத்துத்திக்கு.

உ௧.—(கு-ரை). கிழக்குமுதலிய விவகாரத்திற்குக் காரணமாய் ஒன்றாய் வியாபகமாயிருப்பது திக்காம். அது பொருள்களினிருப்புப் பற்றிக் (1) கிழக்கு, (2) தென்கிழக்கு, (3) தெற்கு, (4) தென்மேற்கு, (5) மேற்கு, (6) வடமேற்கு, (7) வடக்கு, (8) வடகிழக்கு, (9) மேல், (10) கீழ் எனப் பத்துவகையாம். [மேல் - விசும்பு. கீழ் - பாதாளம்.] திக்கு - திசை.

அ - கை.

## தத்துவ விவகாரங்களைக் கூறல்.

௨௧.—சிவனுக்குத் தூலசரீர வியவகாரத்துக்கு அன்னமயமான சட்கோச தத்துவம்-௩௬, சூட்சும சரீரத்துவம் ௨௦, சிவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரமம்-௫, ஆகத் தத்துவம்-௬௧.

சூட்சும சரீர வியவகாரத்துக்குச் சூட்சும சரீர தத்துவம்-௨௦, சிவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரமம்-௫, ஆகத் தத்துவம்-௨௫.

காரணசரீர வியவகாரத்துக்குச் சிவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரமம் ஆகத் தத்துவம்-௫.

சிவ வியவகாரத்துக்குச் சிவன், ஈசுரன், பிரமம் ஆகத் தத்துவம் -௩.

சாட்சி வியவகாரத்துக்குச் சாட்சி-௧. ஈசுரனுக்குத் தூல சரீர வியவகாரத்துக்குச் சமட்டி அன்னமயகோச தத்துவம்-௩௬, சமட்டி சூட்சும சரீரதத்துவம்-௨௦, சமட்டி சிவன் அவித்தை-௨, ஈசுரன், வித்தை, பிரமம்-௩, பூதம்-௫, ஆகத் தத்துவம்-௬௬. சூட்சும சரீர வியவகாரத்துக்குச் சமட்டி சூட்சும சரீரதத்துவம்—௨௦, சமட்டி சிவன் அவித்தை-௨, சூட்சுமபூதம்-௫, ஈசுரன், வித்தை, பிரமம்-௩, ஆகத் தத்துவம்-௩௦.

காரண சரீர வியவகாரத்துக்கு ஈசுரன், வித்தை, பிரமம் ஆகத்தத்துவம்-௩.

ஈசுர வியவகாரத்துக்கு ஈசுரன் பிரமம்-உ.

பிரம வியவகாரத்துக்குப் பிரமம்-க.

இந்திரிய வியவகாரத்துக்கு இந்திரியம்-க, சட்கோச தத்துவம்-சு, கரணம்-ரு, வாயு-ரு, சீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரமம்-ரு, ஆகத் தத்துவம்-உஉ.

மனோராச்சிய (வினைண்ண) வியவகாரத்துக்கு (உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்) கரணம்-ரு; சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-ரு; ஆகத் தத்துவம்-க0.

இப்படித் தத்துவங்களினுடைய தோற்றமு (சிருஷ்டியு) ம் நிலை (ஸ்திதி) யுஞ் சொல்லப்பட்டன.

அன்னமயமான சட்கோசம்.

உக.—(கு-ரை). அன்னத்தினு ஞண்டாகிய (ஸ்தூல சரீரத்தின்) சர்மாதி கூட்டமாறும் ஆத்மாவிற்குக் கோசம் (உறை) போலிருப்பதால் சட்கோசதத்துவம் எனப்பட்டன. சட்கோசம் = ஆறு உறை.

அவித்தை.

தேகமே ஆத்மா என்னும் அபிமானத்தை யுண்டுபண்ணுவதுதான அவித்தை (அஞ்ஞானம்).

வித்தை

தேகமே ஆத்மா என்னும் அபிமானத்தை நிவர்த்தியாக்குவதுதான் வித்தை (ஞானம்).

## சாட்சி.

அந்தக்கரணத்தை யுபாதியாகவுடைய சேதனம், அல்லது உதாசீனமாய்ச் சமீபத்தி லிருந்துகொண் டறிவதாகிய சேதனம், அல்லது அந்தக்கரணத்திலும் அதன் விருத்திகளிலுமுள்ள சேதனமாத்திரம் சாட்சியாம்.

## சிருஷ்டிவகை.

வேதாந்த சித்தாந்தத்துள் உத்தம மத்திம கனிஷ்ட அதிகாரிகளுக்கு அறிவிக்கும்பொருட்டு அஜாதவாதம் யுகபத்சிருஷ்டி கிரம சிருஷ்டியென மூன்று பட்சங்கள் சொல்லப்பட் டிருக்கின்றன. உண்மையாக வுள்ளது பிரமமே; தேகாதிப் பிரபஞ்சம் எக்காலத்தும் இன்றென்னும் பட்சம் அஜாதவாதமாம். இதுவே அதனது முடிந்த தீர்ப்பாம். சொப்பன வுலகு கிரமமின்றி மனத்தினின்று முண்டாவதுபோல் தேகாதிப் பிரபஞ்சம் கிரமமின்றிப் பிரமத்தினின்று முண்டாயிற்றென்னும் பட்சம் யுகபத் சிருஷ்டியாம். மாயையின் தமோகுண வடிவப் பிரகிருதியின் விட்சேபத்தினின்றும் ஆகாயாதி சூட்சும பூதங்களும், அவற்றின் சத்துவ இராசத குணங்களிலிருந்து சூட்சும தேகமும், தமோகுண மாத்திரமுடைய சூட்சும பூதங்கள் பஞ்சீகரணப் படுதலால் ஸ்தூல பூதங்களும், அவற்றால் பூலோகம், புவலோகம், சுவலோகம், ஜனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம், என்றேழு மேலுலகங்களும், அதல, விதல, சுதல, தராதல, ரஜாதல, மகாதல, பாதாளம் என்றேழு கீழுலகங்களும், அவ்வுலகங்களுள் சீவனுடைய போகத்திற்குத் தகுதியான அன்னாதிகளும் போகத்திற்கு ஸ்தானமான தேவ மனுஷிய பசுபட்சிமுதலிய ஸ்தூல சரீரங்களு முண்டாகின்றன என்னும் பட்சம் கிரம சிருஷ்டியாம். இப்புத்தகத்தில் இதுகாறும் கூறிவந்த சிருஷ்டி கிரமசிருஷ்டியாம். இச்சிருஷ்டி கனிஷ்டாதிகாரியின் பொருட்டுச் சொல்லப்பட்டதாம். அஜாதவாதமே உடம்பாடர்க்

கூறும் வேதாந்த சித்தாந்தத்திற்குக் கிரம சிருஷ்டியையும் யுகபத் சிருஷ்டியையும் கூறுவதில் கருத்தின்றாயினும் மத்தியாதிகாரியும் கனிஷ்டாதிகாரியும் அத்வைதப் பிரமத்தை யறிவதற்காக ஜகத்தை நிஷேதிக்கவேண்டி யிருத்தலால் அதுபற்றி அஃது இருவகைச் சிருஷ்டியையும் கூறிற்று.

பிரமவிசாரத்தினால் யதார்த்தஞான முண்டாகாதவனுக்குக் காரியத்தைக் காரணத்துளடக்குதல் வடிவ லயசிந்தனையினிமித்தம் உற்பத்திக்கிரமம் சொல்லப்பட்டது. லயசிந்தனையால் அத்வைதப் பிரமத்தினிடத்துப் புத்தி ஸ்திரப்படுவதுபற்றிக் கிரம கிருஷ்டியும் சொல்லவேண்டியதாயிற்று.

அ - கை.

## தத்துவங்களின் லயக்கிரமங் கூறல்.

உஉ—இனித் தத்துவ மொடுங்கு (தத்தங் காரணங்களுளடங்கு) கின்ற வழி சொல்லுகிறோம். அதெங்ஙனமெனில்:—

சகல சீவர்களிடத்திலே இருக்கின்ற தூலசரீரங்களும் தமக்காதாரமான தூல பூதங்களுடனே மடிந்து (முன்னிலைமை விட்டுப்) பூதமாத்திரமாக ஒடுங்கும். இந்தத் தூல பூதங்களும் பஞ்சீகரணம் (கலப்பு) விட்டுத் தன்மாத்திரையான (சூட்சுமமான) தாமதகுண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவல இரணிய கர்ப்பாவத்தை (சூட்சும பூதங்களா யிருக்கும் நிலை) யென்று சொல்லப்படும். சூட்சும சரீரம் இருபது தத்துவமுங் கட்டு (நிலை) விட்டுப் பூதங்களினுடைய சாத்விக குணமும் இராசத குணமுமாக வொடுங்கும். அதெங்ஙனெனனில்:—சகலப் பிராணிகளிட

த்திலு மிருக்கின்ற அகங்காரமும், ஆக்கிராணமும், உதானவாயுவும், உபத்த விந்திரியமும் பிருதிவியி லொடுங்கும். சித்தமும், சிங்ஙுவையும், சமானனும், பாயுருவும் அப்புவி லொடுங்கும். புத்தியும், சட்சுவும், அபானனும், பாதமும் அக்கினியி லொடுங்கும். மனதும், துவக்கும், பிராணனும், பாணியும் வாயுவிலொடுங்கும். தேயுசும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும் ஆகாசத்தி லொடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்களாகும். இந்தச் சூட்சும பூதங்களுள் பிருதிவி அப்புவிற்கரைந் தொடுங்கும். அப்புவும் அக்கினியிற் சுவறி (வற்றி) யொடுங்கும். விளக்குப்போல அக்கினியுட் வாயுவிலணைந் தொடுங்கும். வாயுவும் ஆகாசத்திலேயாய்ந் தொடுங்கும். ஆகாசமும் விட்சேபசத்தியிலொடுங்கும். ஆவரண சத்தியும் விட்சேப சத்தியும் மூலப்பிரகிருதியின் தாமதகுண மாத்திரமாய் ஆலமரம் ஆலவித்தி லொடுங்கிறாற்போல இன்னும் ஒரு சிருட்டிக்கு வித்தாக மாயையிலும் அவித்தையிலும் ஒடுங்கும். அந்த மாயையும் அவித்தையும் அதிநுண்மையான (மிகவும் சூட்சுமமான) மூலப்பிரகிருதியென்று சொல்லப்பட்ட விந்துதத்துவத்தி லொடுங்கும். அந்த விந்துவும் பாம்பென்கிற பெயர்போய்ப் பழுதையா (கயிறு) ய்க் கண்டாற்போலத் தனக் கதிட்டானமான பிரம சைதன்ய மாத்திரமாக வொடுங்கும். இப்படிப் பொய்யெல்லாம் (தேகாதிப் பிரபஞ்சமெல்லாம்) மெய்ப்பொருளொன்றாகக் கண்டு அதுவே சுபாவசித்தமாய் நிசமாக விருக்கின்ற தன் வடிவென (தனது நிசவடிவென்று)க்

கண்டுதெளிந்து கவலை (தேகாதிப் பிரபஞ்சத்தா லுண்டாகின்ற வருத்தம்) கெட் டிருக்கின்றவனே சீவன் முத்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.

உஉ.—(சூ-ரை.)(க)அந்தக்கரணத்து ளொன்றான(1)அகங்காரமும் ஞானேந்திரியத்து ளொன்றான (2) ஆக்கிராண (மூக்கிந்திரிய)மும், பஞ்சவாயுவினு ளொன்றான (3) உதானவாயும், கருமேந்திரியத்துளொன்றான (4) உபத்த இந்திரியமும் சூட்சும பூதங்களு ளொன்றான பிருதிவியின் காரியமானபடியினாலே அதிலொடுங்கின; காரியம் தன் (முதற்) காரணத்துள் லயமாமென்னும் நியமமிருத்தலா லென்க.

(உ) (5) சித்தமும், (6) சிங்ஙுவையும், (7) சமானவாயுவும், (8) பாயுருவும் அப்புவின் காரியமானதால் அதிலொடுங்கின.

(ங) (9) புத்தியும், (10) சட்சுவும், (11) அபானவாயுவும், (12) பாதமும் அக்கினியின் காரியமாதலால் அதிலொடுங்கின.

(ச) (13) மனதும், (14) துவக்கும், (15) பிராணவாயுவும், (16) பாணியும் வாயுவின் காரியமாதலால் அதிலொடுங்கின.

(ரு) (17) தேயுசு (உள்ளமு)ம், (18) சுரோத்திரமும், (19) வியானவாயுவும், (20) வாக்கும் ஆகாயத்தின் காரியமாதலால் அதிலொடுங்கின.

## ஆரோபம் அதிஷ்டானத்தி லடங்கும்வகை.

கயிற்றில் ஆரோபமா (கற்பனையா)கத் தோன்றிய அரவு (பிராந்தியுள்ள சமயத்து) ஓடுவதுபோன்றும் நகர்வது போன்றும் இருப்பினும் முடிவில் (பிராந்தி நீங்கிய சமயத்து) அது தனக்கதிஷ்டமான கயிற்றி லடங்கிப் போதலால் கயிறே விளங்குதல் போன்று பிரமத்தில் ஆரோபமாகத் தோன்றிய (கீழ் கீழ் தோன்றிய தத்துவங்களை

நோக்க அதி நுண்மையாயுள்ள) விந்துதத்துவமெனப்படும் பிரகிருதியும் (பிராந்திகாலத்துத்) தேகாதிப் பிரபஞ்ச காரிய ஜாலங்களுக்குக் காரணமாதலபோன் றிருப்பினும் முடிவில் (பிராந்தி நீங்கியகாலத்து) அது தனக்கதிஷ்டானமான பிரமத்தி லடங்கிப்போதலால் பிரமமே மிஞ்சி விளங்கா நிற்குமென்பது.

"தண்டத்தை நோக்கி மீது சர்ப்பமென் றிடும்பி ராந்தி
தண்டஞா னத்தாற் றீரிற் றகவிது வென்ற வொன்றே
தண்டமா னதுபோ லாரோ பிதமான சமுசா ரிக்குத்
தண்டமை யுணர்ச்சி யாலே தத்துவம் பிரம மாகும்"
என்று சூதசங்கிதை கூறுவதிங் கறியத்தக்கதாம்.

## சீவன் முத்தன்.

சீவத்துவம் (யானெனதென்னு மபிமானம்) விடுபட்டவன் சீவன் முத்தனாம். தேகாதிப் பிரபஞ்சம் தோற்றிக்கொண் டிருக்கப் பிரம சொரூபமாக நிலைத்தல் சீவன் முத்தியாம். சீவன் முத்தனுக்கு அவித்தையின் ஆவரணம் விட்சேபமென்னும் சத்திக ளிரண்டனுள் சம்சார பரம்பரைக்குக் காரணமான ஆவரணமானது தத்துவ ஞானத்தினால் நசித்தும் விட்சேப (அவித்தியாலேச) மானது (வறுத்த விதைபோன்று) விதேக முத்திவரையில் பிராரத்தத்தினால் நசியாமலிருத்தலினால் அதுபற்றி அவனுக்கு (விட்சேப சத்தியின் காரியமான) தேகாதிப் பிரபஞ்சம் (பொய்யென்று நிச்சயிக்கப்பட்ட கானனீர் மீண்டுந் தோன்றுதல் போன்று) தோற்றிக்கொண் டிருக்கின்றதென்பது.

"திரிசிய மாம்ப வஞ்சந் தேய்ந்துசொப் பனம்போற் றோன்ற
வுரியவெம் பால்வீ ழித்தோ னொருவனே சீவன் முத்தன்"
என்று சூதசங்கிதை கூறுவதிங் கறியத்தக்கது.

தேகாதிப் பிரபஞ்சம் பொய்யாகவேனுந் தோற்றுதலின்றி (முற்றுமின்றி)ப் பிரமசொரூபமாக நிலைத்தல் விதேகமுத்தியாம்.

ஸ்தூல சூக்கும காரணமென்னும் மூன்று தேகமும் நீங்கிப்போதல் விதேக முத்தியென்று கூறினுமொக்கும்.

அ - கை.

## தத்துவ வகையைக் கூறல்.

உங.—இப்படித் தோன்றி யொடுங்குகின்ற தத்துவம் ஙகூ; அவைகளெவையெனில்:—பூதம்—ரு, தூலசரீர தத்துவம்-கூ, சூட்சும சரீரதத்துவம்-உ0, காரண சரீரமான மாயை அவித்தை—உ, இவற்றிற் பிரதிபிம்பித்த ஈசுவரன் சீவன்-உ, இவற்றிற்கெல்லாம் அதிட்டான சைதன்யமா யிருக்கின்ற பிரமம்—க, ஆகத் தத்துவம்-ஙகூ.

உங.—(கு-ரை). தோன்றி யொடுங்குகின்ற தத்துவம் ஙகூ என்றுகூறியதில் தோன்றுவதும் ஒடுங்குவதுமாயுள்ள தத்துவம் ஙரு என்றும் அவற்றிற்கு விவர்த்த காரணமாயுள்ள தத்துவம் (பிரமம்) க என்றும் கொள்க.

ஈசுவரனுக்குக் காரண சரீரம்—மாயை. சீவனுக்குக் காரண சரீரம்—அவித்தை.

அ - கை.

## பொதுத் தத்துவ மின்னதென்றும் சிறப்புத் தத்துவ மின்னதென்றும் கூறல்.

உச.—இவற்றிற் சீவருக்குச் சமுதாயம் பூதம்-ரு, மாயை-க, மாயாப் பிரதிபிம்பரான ஈசுரன்-க, பிரமம்-க, ஆக இந்த எட்டுஞ் சகலப் பிராணிகளாலும் சமுதாயமா (பொதுவா)க வநுபவிக்கப்படும். மற்ற விருபத்தெட்டும் அந்தந்தப் பிராணிகளால் பிரதக்கா (தனித்தனியா)க வநு

பவிக்கப்படும். அதெங்ஙனெனின்:—பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில் எல்லாருக்கும் ஆதாரமில்லை. மழை மறுக்கில் எல்லாருக்குஞ் சலமில்லை. தேயுவில்லா திருந்தால் பாகம் (உணவுப் பொருள்கள் உண்ணுதற்குப் பக்குவமாதல்) இல்லை. வாயுவியக்க மில்லாவிட்டால் வாடை (வாடைக்காற்று) தென்றல் (தென்றற்காற்று) இல்லை. ஆகாச மிறக்கில் ஒருவருக்கும் அவகாச (இட) மில்லை. மாயையும் மாயாப் பிரதிபிம்பரு மிறக்கிற் சகல சமயத்துக்குந் தெய்வமில்லை. பிரமமில்லையாயின் ஒருவருக்கு மறிவில்லை. ஆகையால் இந்த எட்டும் எல்லாருக்குஞ் சமுதாயமாம். பிரதக் கெங்ஙனெனனில் (தனித்தனியா யநுபவித்தற் குரியவையென்பது எப்படி யென்றால்):—ஒருவனுக்குத் தூலசரீர மிறக்கில் எல்லாருக்குந் தூலசரீரம் இறவாதபடியினாலும், சூட்சும சரீரத்தி லொருவனுக்கு அங்கவைகல்லியம் (உறுப்புக்குறைவு) வந்தால் எல்லாருக்கும் வாராதபடியினாலும், முத்தரா யிருக்கின்ற சுகவாமதேவர் முதலானோருக்கு அவித்தையுஞ் சீவனு மிறந்து போயிருக்க மற்றையோருக் கெல்லாம் அவித்தையுஞ் சீவனு மிறவாதபடியினாலும் இந்த விருபத்தெட்டுத் தத்துவமும் அவனவனுக்கு பிரதக் கென்பதிலே சந்தேகந் தேவையில்லை.

### ஈசுவரன்.

உச.—(நூ-ரை). மாயாப் பிரதிபிம்பனாயுள்ள ஈசுவரன் ஒருவனேயா யிருந்தும் அவ்வீசுவரனைச் சமயவான்கள் உண்மை யுணராது காலதேச நிமித்தங்களுக் கேற்றவாறு வேறுவேறு றுருவமும்

வேறுவேறு நாமமும் கற்பித்துக்கொண்டு வணங்குதல்பற்றி 'மாயை யும் மாயாப்பிரதி பிம்பருமிறக்கில் சகல சமய (மத)த்திற்கும் தெய்வ மில்லை' என்று கூறப்பட்டது. "உலைச் சமயங்க ளொவ்வாத சாத் திரமாம், சவலைக் கடலுள ளுய்க்கிடந்து தடுமாறும், கவலைகெடு த்து" என்று மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திங்கறியத்தக்க தாம்.

## பிரமம்.

அறிவாகாரமா யிருத்தல் யாதென்று விசாரிக்குமிடத்து இந்திரி யம், அந்தக்கரணம், சீவனியாவும் உண்மையி லறிவாகாரமா யிருத் தலின்றென்பது பெறப்பட்டுப் பிரமமே அறிவாகாரமா யிருப்பதென் றேற்படுகிறதினாலே 'பிரமமில்லையாயின் ஒருவருக்கு மறிவில்லை' என்று கூறப்பட்டது.

"சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனே திகழ்வான்" என்று பிரமகீதை கூறுவதிங் கறியத்தக்கது.

## அங்கவைகல்யம்.

குருடாதல், செவிடாதல், ஊமையாதல் முதலியவை அங்கவை கல்யமாம்.

## சுகர் வாமதேவர்.

சுகர் வாமதேவரென்பார் வேதப் பிரதிபாதகராயுள்ள தத்துவ ஞானிகள். வராகோபநிஷத்து நான்காவ தத்தியாயத்தில் "சுகர் முத்தர் வாமதேவர் முத்தர். அவர்களைத் தவிர முத்தியடைந்தவர்க ளில்லை. (இவ்விருவருடைய மார்க்கத்தைத் தவிர முத்திக்கு வேறே மார்க்க மில்லையென்பது தாற்பரியம்.) இந்த லோகத்தில் சுகமார்க் கத்தை யெந்தத் தைரியசாலிக ளனுசரிக்கின்றார்களோ அவர்கள் சத் தியோ (இந்தத் தேகம் போனவுடனே) முத்தராகின்றார்கள். இந்த லோகத்தில் வாமதேவ மார்க்கத்தை யெப்போது மனுசரிக்கிறவர்கள்

மறுபடி மறுபடி பிறப்பை யடைந்து சத்துவகுணத்தோடு கூடின யோக மார்க்கங்களினாலேயும் சாங்கிய (ஞான) ங்களினாலேயும் கரு மங்களினாலேயும் கிரமமுத்தர்க ளாகின்றார்கள். சுகமார்க்கம் வாம தேவமார்க்கம் என்று இரண்டுமார்க்கங்கள் தேவனா லேற்படுத்தப் பட்டன. சுகமார்க்கமானது பட்சிமார்க்கம் (குறித்த விடத்திற்குப் பட்சிகள் பறந்துபோவதுபோல் இந்தத் தேகம் போனவுடனே முத்தி யடைவது) என்றும், வாமதேவ மார்க்கமானது எறும்புமார்க்கம் (குறித்த விடத்திற்கு எறும்பு போகவேண்டுமானால் கிரமக் கிரம மாய் ஊர்ந்துபோவதுபோல் இந்தத் தேகத்தைவிட்டுப் பிறகு இதை விட வுத்தமமான ஜன்மமடைந்து அதிலிருந்து பின்னும் உத்தம மான ஜன்மமடைந்து இப்படியே பல ஜன்மங்களை யடைந்து கடை சியில் பிரமலோகஞ்சென்று பிருமாவுடன் முத்தி யடைவது) என் றும் சொல்லப்பட் டிருக்கின்றன. விதிவாக்கியங்களினாலேயாவது நிஷேத வாக்கியங்களினாலேயாவது மகாவாக்கிய விசாரத்தினாலே யாவது சாங்கிய யோக சமாதியினாலேயாவது அசம்பிரஞ்ஞா சமாதி யினாலேயாவது தம ஆத்மசொரூபத்தை யறிந்து நிர்மலமானவர்கள் சுகமார்க்கத்தினாலே பரமபதத்தை (மோட்சத்தை) அடைகிறார்கள். யமமுதலிய ஆசனங்களினாலே யுண்டாகின்ற ஆயாசமாகிய அடாப்பி யாசத்தினாலே (அடயோக அப்பியாசத்தினாலே) அடிக்கடி அநேக தடைகளினா லுண்டான அணிமாதி (சித்தி)களுக் குட்பட்டவனாய் நல்ல பயனை யடையாமல் மறுபடி நல்ல குலத்திற் பிறந்து, முந்திய (ஜன்மத்தின்) வாசனையினாலே மறுபடி யோகாப்பியாசம் செய்து, அநேக ஜன்ம அப்பியாசத்தினால் வாமதேவ மார்க்கத்தினாலே அந்த விஷ்ணுவினுடைய பரமபதமாகிய முத்தியை யடைகின்றான். பிரமப் பிராப்தியைக் கொடுக்கத்தக்கதாகவும் மங்களகரமானதாகவும் இந்த இரண்டு மார்க்கங்க ளிருக்கின்றன. இவைகளி லொன்று சத்தியோ முத்தியையும் மற்றொன்று கிரமமுத்தியையும் கொடுக்கத்தக்கன" என்று கூறுவதிங்கு நன்கு கவனிக்கத்தக்கதாம்.

அ - கை.

## முப்பத்தாறுந் தத்துவம் ஆத்மவடிவ சிவம் என்பதை விளங்கக் கூறல்.

உரு.—இந்தத் தத்துவம் முப்பத்தாறில் எப்போதுந்தானாக வே காணப்பட்ட தத்துவம்-க; எப்போதுந் தனக்கு அன்னியமாகவே காணப்பட்ட தத்துவம்-எ, தானாகவுந் தனக்கு அன்னியமாகவும் அநுபவிக்கப்பட்ட தத்துவம்—உஅ. அதெங்ஙனெனின்:—அவத்தாத்திரய சாட்சியா யிருக்கின்ற பிரம சைதன்னியம் எல்லா வவத்தையிலும தானாகவே விளங்குகையினாலும் மற்றத் தத்துவங்கள் போலத் தனக்கு அந்நியமாகக் காணப்படாதபடியினாலும் பிரம சைதன்ய மொன்றுமே தானாகவிருக்கப்பட்டது. பஞ்ச பூதம் மாயை மாயாப்பிரதிவிம்பர் ஆக வேழும் தன் றொழி லான (ஈசுவரனுடைய கிருத்தியமான) பஞ்ச கிருத்தியம் தசாவதார முதலான தொழில்க ளொருகாலுந் தன்னுடைய தொழில்களாகக்காணப் படாதபடியினால் இந்த வேழு தத்துவமுந் தனக்கு அன்னியமே யல்லாமல் தானாக மாட்டா. மற்ற இருபத்தெட்டுத் தத்துவமும் நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி (ஆசிரியனிடத்தோதி விரதங் காத்து விவாகமின்றி யிருப்பவன்), நான் கிருகஸ்தன் (இல்லறத்தில் வழுவாது மனையாளோடுகூடி வாழ்பவன்), நான் வானப்பிரஸ்தன் (இல்லறத்தை விட்டு மனையாளோடாயினும் தனித்தாயினும் வனத்திற் சென்று தவஞ்செய்

பவன்), நான் சந்நியாசி (முற்றத்துறந்தவன்), நான் ஆண்,
நான் பெண், நான் கரியன், நான் சிகப்பன், நான்
கட்டையன், நான் நெட்டையன், நான் பருத்தேன்,
நான் இளைத்தேனென்று தானாக வழங்குகின்ற தூலசரீ
ரமாகிய ஆறுதத்துவமும், மற்றொரு வேளையிலே தன
க்குப் புறம்பு (வேறு) பட்டு என்மாடென்கன்றெ
ன்றாற்போல என் சரீரம் பருத்தது, இளைத்தது, நரை
த்தது, என் சரீரம் பிறந்து இத்தனைநாள் ஆயிற்றென்று
தான்வேறு தூலசரீரம் வேறாக வழங்குகின்றபடியினா
லும்; நான் கண்டேன், கேட்டேன், தொட்டேன், போகி
த்தேன், கொடுத்தேன், வாங்கினேன், நடந்தேன், புசித்
தேன், சிந்தித்தேன், நிச்சயித்தேன், இந்தப் பஞ்சத்துக்கு
(கருப்பிற்கு)ச் சீவித்தேனென்று தானாக வழங்குகின்ற
சூட்சுமசரீர தத்துவம் இருபதும் மற்றொரு வேளையிலே
தனக்குப் புறம்புபட்டு என்வீடென்னுடைமை யென்றாற்
போல என்கண் என்காது என்மூக்கென்னாக்கென்
கை யென்கா லென்மன மென்புத்தி யென்னகங்கார மெ
ன்சித்த மென்பிராணனென்று தான் வேறு அவைகள்
வேறாக வழங்குகின்றபடியினாலும்; நானறியே னறிவே
னென்று தானாக வழங்குகின்ற வஞ்ஞானமுஞ் சிதாபா
சனும் மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்புபட்டு என்
னஞ்ஞானம் என் சீவனென்று வழங்குகின்றபடியினாலும்
இந்த இருபத்தெட்டுந் தத்துவமுந் தானாகவுந் தனக்கன்
னியமாகவும் வழங்குகின்றது சித்தம். இப்படிச்சொன்ன
குருவைப் பார்த்து சிஷ்யன் கேட்கும்படி (விநயபூர்வக

மாய்க் கேட்பதாவது :— சுவாமி!) இந்த இருபத்தெட்டுத் தத்துவமுந் தானுஞ் சாட்சியைப்போல ஒருதன்மையாகத் தோற்றவேண்டுமே யல்லாமற் பஞ்சபூதத்தைப்போலத் தனக்கன்னியமாகக் காணக் கணக்கி (காரணமி)ல்லை இந்த இருபத்தெட்டுந் தனக்கன்னியமேயானு லெப்போதும் புறம்புபட்டே யிருக்கவேண்டு மல்லாமல் தானாக வழங்கக் கணக்கில்லை. தானுமாய்த் தனக்கு அன்னியமுமா யிருக்குமென்கின்றது இருட்டாகித்த (இருட்டுவடிவசூரிய) னென்றாற்போலச் சொன்னீர். இது விருத்தமென்கின்ற சங்கைக்கு (ஆட்சேபத்திற்குக் குருசொல்லுகிறார்) பரமார்த்தமா (உண்மையா)கத் தானென்கின்ற தொருவகையும் அத்தியாசத்தி (மயக்கத்தி) னாலே தானென்கின்ற தொருவகையும் ஆக இருவகையுமுண்டு. சாட்சிசைதன்னியத்தைத தானென்கின்றது பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல. தனக்கன்னியமாயிருக்கின்ற இந்தவிருபத்தெட்டையுந் தானென்கின்றது கட்டையைக் கள்ளனென்றாற்போலவும் பழுதையைப் பாம்பென்றாற் போலவும் புத்திர தாராதிகளை (பிள்ளை பெண்சாதி முதலானவர்களை)த் தானென்றாற் போலவும் மயக்கமே யல்லாமல் உண்மையல்ல; ஆகையினால் அஞ்ஞானகாலந் தொடங்கித் தானல்லவென்று காணப்பட்ட தத்துவம் எழு; இப்போது இப்படிப்பட்ட விவேகம் பண்ணின பிற்பாடு தானல்லவென்று காணப்பட்ட தத்துவம்-உஅ; ஆக இந்த முப்பத்தைந்து தத்துவங்களையும் அதற்குச் சொன்ன குணங்குறிக (சிறப்பியல்லென்னு மடையாளங்க) ளுடனே கூடக்

காண்கின்ற அறிவு கடத்தைப் பார்க்கின்றவன் கடத்திற்குப் புறம்பாகவே இருந்து கடத்தைப் பார்க்கின்றது போல இந்த முப்பத்தைந்துதத்துவத்தையுங் காண்கின்ற முப்பத்தாறுந் தத்துவமாகிய பேரறிவென் றுணர்ந்து அதுதானென்றறிந்து (தனதெதார்த்த வடிவமென் றுள்ளவாறு நிர்விகற்ப சமாதிவாயிலாக வறிந்து) அதுதானே பிரமமென்று தெளிந்தவனே பிரம தரிசனமுடைய சீவன்முக்தனென்று சொல்லப்படுமென் றுத்தரம்.

## பஞ்சகிருத்தியம்.

உடு.—(க-ரை). சிருஷ்டி (படைப்பு), திதி (காத்தல்), சங்காரம் (அழித்தல), திரோபவம் (மறைத்தல்), அனுக்கிரகம் (அருளுதல்)என்னு மிவ்வைந்து தொழில்களும் பஞ்சகிருத்திய மெனப்படும். இ-வைந்தனுள் முன்னுள்ள மூன்றும் சடத்திற்கும் பின்னுள்ளவிரண்டும் சித்திற்கு முரியனவாம்.

## தசாவதாரம்.

துஷ்டரையொழித்துச் சிஷ்டரைக்காக்குமாறு காலதேச நிமித்தங்களுக்கேற்ற வாறு ஈசுவரன் கொள்ளும் வடிவத்திற்கு அவதாரமென்று பெயராம். மச்சம் (மீன்), கூர்மம் (ஆமை), வராகம் (பன்றி), நாரசிங்கம் (மனிதவுருவும் சிங்கவுருவுங் கலந்த வடிவம்), வாமனம் (குறுகிய மனிதவடிவம்), பரசுராமன், இரகுராமன், பலராமன், கண்ணன், கற்கி (குதிரைமுகமுடைய மனிதவடிவம்) என்பன தசாவதாரமா (பத்துப்பிறப்பா) ம். இவ்வவதாரமே யன்றி நரநாராயணன், கபிலன், வியாதன், பௌத்தன் என்றற்றொடக்கத்த அவதாரங்களுமுண்டு. [கர்மத்தினலன்றி யிச்சையினற் கொள்ளும் வடிவம் அவதாரமெனப்படும்.]

## ஸ்தூல சரீரதர்மம்.

பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்னும் ஜாதியும்; பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும் ஆசிரமமு (நிலையு) ம்; ஆண் பெண் என்னும் அங்கமு (உறுப்பு) ம்; செவலை, கட்டை, நெட்டை என்னும் குணமும்; பருத்தல், இளைத்தல் என்னும் விகாரமும் ஸ்தூலசரீரத்தின் தர்மங்களாம். இத்தர்மங்கள் அத்தியாசத்தி (பிராந்தியி) னால் நான் பிராமணன் என்றற் றொடக்கத்தனவாக ஆத்மாவினிடத்துத் தோன்றுகின்றன. பிராமணசாதி முதலியனவே ஆத்மா வாகுமாயின் என் சாதி, என் சரீரம் இளைத்தது என்றற் றொடக்கத்தனவாக வழங்குதல் கூடாது; உடைமையும் உடையதும் ஒன்றாயிருத்தல் முடியாமையின்.

## சூட்சும சரீரதர்மம்.

காண்டல் (கண்ணிந்திரியத்தின் தொழில்), கேட்டல் (செவியிந்திரியத்தின் தொழில்), தொடல் (பரிச இந்திரியத்தின் தொழில்), போகித்தல் (உபஸ்த இந்திரியத்தின் தொழில்), கொடுத்தல் வாஙகல் (பாணீந்திரியத்தின் தொழில்), நடத்தல் (பாதேந்திரியத்தின் தொழில்), புசித்தல் (வாக்கிந்திரியத்தின் தொழில்), சிந்தித்தல் (சித்தத்தின் தொழில்), நிச்சயித்தல் (புத்தியின் தொழில்) சீவித்தல் (பிராணனின்தொழில்) ஆகிய இவை சூட்சுமதேகத்தின் தர்மங்கள். இத்தர்மங்கள் அத்தியாசத்தினால் நான் கண்டேன் நான்கேட்டேன் என்றற றொடக்கத்தனவாக ஆத்மாவினிடத்துத் தோன்றுகின்றன.

## காரண தேக தர்மம்.

அறியாமை காரணதேகத்தின் தர்மம். இஃது அத்தியாசத்தினால் நான் அறியேன் என்று ஆத்மாவினிடத்துத் தோன்றுகின்றது.

## சீவதர்மம்.

அறிதல் சீவனின்தர்மம். இஃதத்தியாசத்தினால் நான் அறிந்தேன், அறிகின்றேன், அறிவேனென்று ஆத்மாவினிடத்துத் தோன்றுகின்றது.

ஸ்தூலசரீரமும் அதன் தர்மமும், சூக்குமசரீரமும் அதன் தர்மமும், அஞ்ஞானமும் அதன் தர்மமும், சீவனும் அதன் தர்மமும் ஆத்மாவல்ல. ஸ்தூல சரீரதத்துவம் (6) சூட்சுமசரீரதத்துவம் (20) அஞ்ஞானம் (1) சீவன் (1) ஆக இவ்விருபத்தெட்டுத் தத்துவங்களும் ஆத்மாவிற்கு வேறுபட்டவையென்று இங்கு விசாரமுகத்தாற் நிர்மாணிக்கப்பட்டது. இதுபற்றி விரிவாய் வாசுதேவமனனம்,பஞ்சகோச விலக்ஷண நிரூபகத்திற் கண்டு கொள்க.

## அத்தியாசம்.

பிராந்தி (மயக்க) ஞானத்தின் விஷயமாகிய மித்தியாவஸ்துவிற்கும் (கயிற்றிற்றோன்றிய பாம்பிற்கும்) பிராந்தி ஞானத்திற்கும் அத்தியாசமென்று பெயராம். இவ்வத்தியாசம் அர்த்தாதத்தியாசம் ஞானத்தியாசமென விரண்டுவகைப்படும். [கயிற்றிற்றோன்றிய பாம்பு அர்த்தாத்தியாசமாம். அதன் ஞானம் ஞானத்தியாசமாம்.] இவ்விரண்டனுள் அர்த்தாத்தியாசம் (1) கேவல சம்பந்தாத்தியாசம், (2) சம்பந்த சகித சம்பந்தியத்தியாசம், (3) கேவலதர்மாத்தியாசம், (4) தர்மசகித தர்மியத்தியாசம், (5) அன்னியோன்னியாத்தியாசம், (6) அன்னியதராத்தியாசம் என் றறுவகையாம்.

### (1) கேவல சம்பந்தாத்தியாசம்.

அநான்மாவி (சடத்தி)ல் ஆன்மாவின் அத்தியாச முண்டாகின்றது. ஆண்டு அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது அதனது தாதான்மிய (ஒற்றுமை வடிவ) சம்பந்தம் அத்தியஸ்தமாம். ஆகவே, அநான்மாவில் ஆன்மாவின் சம்பந்தம் கேவல சம்பந்தாத்தியாசமாம். [அநாத்மாவில் ஆத்மாவின் சம்பந்த மிருப்பதாகத் தோன்றுதல் மயக்கத்தினலாவதன்றி யுண்மையி லின்றென்பது கருத்து.] வானவெளியில் வானத்தின் சம்பந்தமிருக்கின்ற தென்பது மிதற்குதாரணமாம்.

## (2) சம்பந்த சகித சம்பந்தியாத்தியாசம்.

கயிற்றினிடத்து (அதிற்றோன்றிய) பாம்பின் சம்பந்தமும் (பாம்பாகிய) சொரூபமுமாகிய இரண்டும் அத்தியஸ்தமாதல் (கற்பனையாயிருத்தல்) போன்று ஆன்மாவில் அநான்மாவின் சம்பந்தமும் (அதன்) சொரூபமுமாகிய இரண்டும் அத்தியாசமாகின்றன. ஆதலால் ஆன்மாவில் அநான்மாவின் சம்பந்தச்கித (கூடிய) சம்பந்தியினத்தியாசமுண்டாகின்றது. சம்பந்தத்தையுடையது சம்பந்தியாம்.

## (3) கேவல தர்மாத்தியாசம்.

நான் வெளுத்தேன் நானிளைத்தேன் என்றவிடத்து ஸ்தூல தேகத்தின் வெண்மை முதலியனவும், நான் பார்த்தேன் நான் கேட்டேன் என்றவிடத்துச் சூட்சுமதேகத்தின் பார்வை முதலியனவுமாகிய தர்மங்கள் ஆத்மாவில் அத்தியஸ்தமாகின்றன; அத்தேகங்களின் சொரூபம் அத்தியஸ்தமாகின்றதில்லை. ஆதலால் ஆத்மாவில் ஸ்தூல சூக்குமதேகங்களின் கேவல தர்மத்தினத்தியாச முண்டாகின்றது. வேறொன்றனை யாசிரயித்ததாய் (பற்றுக்கோடாகவுடையதாய்) ச் சுதந்தரமின்றி யிருப்பது தர்மமெனப்படும். வெண்மை, இளைத்தல், பார்த்தல், கேட்டல் முதலியவைகள் தர்மங்களாம்.

## (4) தர்மசகித தர்மியத்தியாசம்.

நான் கர்த்தா நான் போக்தா என்றவிடத்துக் கர்த்திருத்துவமும் (கர்த்தாவாந் தன்மையும்), போக்திருத்துவமும் (போகத்தை யனுபவிக்குந் தன்மையும்) ஆத்மாவின் தர்மமா யிராது அந்தக்கரணத்தின் தர்மமா யிருக்கின்றன. ஆத்மா நிர்விகாரமா யிருத்தலால் அதன்கண் யாதொரு விகாரமுமின்றாம். ஆயினும், அந்தக்கரணத்தின் கர்த்திருத்துவாதி தர்மங்களும் சொரூப (அந்தக்கரண) முமாகிய இரண்டும் ஆத்மாவில் (கிளிஞ்சிலில் வெள்ளித்தன்மையோடு கூடிய வெள்ளி கற்பனையா யிருத்தல்போன்று) அத்தியஸ்தமா யிருக்

கின்றன. ஆதலால் ஆக்மாவில் அந்தக்கரணத்தின் தர்மசகித தர்மியின் அத்தியாச முண்டாகின்றது. தர்மத்தையுடையது தாமியெனப்படும்.

(5) அன்னியோன்னியாத்தியாசம்.

காய்ச்சிய இரும்பில் இரும்பின்தன்மை அக்கினியிலும் அக்கினியின் தன்மை இரும்பிலும் இருத்தல்போன்று ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசமும் அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியாசமும் இருத்தல் அன்னியோன்னியாத்தியாசமாம். ஒன்றற்கொன்றத்தியாசமாதல் அன்னியோன்னியாத்தியாசத்தின் தன்மையாம்.

(1) சத்து, (2) சித்து. (3) ஆநந்தம், (4) அத்வைதத்துவம் (இரண்டென்பதின்றி யிருத்தல்)என்னும் நான்கு விசேடணங்களும ஆத்மாவிற் குரியனவாம். (1) அசத்து, (2) சடம், (3) துக்கம், (4) துவிதசகிதத்துவம் (இரண்டோடு கூடியிருத்தல்) என்னுமிந்நான்கு விசேடணங்களும் அநான்மாவிற் குரியனவாம். இவற்றுள் அநான்மாவின் துக்கம் துவிதசகிதத்துவம் என்னு மிவ்விரண்டு விசேடணங்களும் ஆத்மாவின் ஆநந்தத்தையும் அத்துவைதத்துவத்தையும் மறைக்கின்றன. அம்மறைத்தலினுல் ஆத்மாவில் "நான் ஆநந்தரூபனுயும் அத்துவிதரூபனுயு மிருக்கிறேன்" என்னும் ஞான முண்டாகாது "நான் துக்கியாயும் ஈசுவராதிகளிலும் வேறுனவனுயு மிருக்கிறேன்" என்னும் ஞான முண்டாகின்றது. ஆத்துமாவின் சத்து சித்து என்னு மிவ்விரண்டு விசேடணங்களும் அநான்மாவின் அசத்துவத்தையும் ஜடத்துவத்தையும் மறைக்கின்றன. அதனுல் அநான்ம வாகிய அகங்காராதிகளில் 'அசத்தாயும் சடமாயுமிருக்கிறது" என்னும் ஞான முண்டாகாது "இருக்கிறது விளங்குகிறது" என்னும ஞானமுண்டாகின்றது. இவ்வாறு ஆன்மா னுன்மாக்களுக்குப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) அத்தியாச மிருக்கின்றமை காண்க.

இருத்தல் என்பது சத்து; விளங்குதலென்பது சித்து.

### (6) அந்நியதராத்தியாசம்.

இரண்டில் ஒன்றனது அத்தியாசம் அன்னியதராத்தியாசமாம். (அன்னியதரம் — இரண்டிலொன்று.) அரவில் கயிற்றின் சொரூபம் அத்தியஸ்தமாகாது கயிற்றில் அரவின் சொரூபம் அத்தியஸ்தமாதல் போன்று அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது ஆன்மாவில் அநாத்துமாவின் சொரூபம் அத்தியஸ்தமாதல் அன்னியதராத்தியாசமாம்.

இங்குக் கூறிய ஆறுவகையத்தியாசமும் கீழ்க்கூறப்படும் இருவகையத்தியாசத்துளடங்கும்.

அவை (1) சொரூபாத்தியாசம், ( ) சம்சர்க்காத்தியாசமென்பனவாம்.

### (1) சொரூபாத்தியாசம்.

தத்துவ ஞானத்தினுல் பொய்யென்று நிச்சயிக்கத்தக்க வஸ்து (பாம்பு) அதிஷ்டானத்தில் (கயிற்றில்) சொரூபமாக அத்தியஸ்தமாயிருக்கிறது. தேகாதிப் பிரபஞ்ச அநான்மாவிற்கு அதிஷ்டான (ஆன்ம) ஞானத்தினுல் பாதம் (பொய்யென்று நிச்சயித்தல்) உண்டாதலால், ஆன்மாவில் அதன் சொரூபாத்தியாசமுண்டாகின்றது. ஒன்றன் முழுவடிவமும் மற்றொன்றில் அத்தியஸ்தமாதல் சொரூபாத்தியாசமாம்.

### ( ) சம்சர்க்காத்தியாசம்.

பாதிக்க (பொய்யென்று நிச்சயிக்க)த்தகாத வஸ்துவின் சொரூபம் அத்தியஸ்தமாகின்றதின்று. ஆனுல் அதன்சம்பந்தம் அத்தியஸ்தமாம். ஆதலால் அநான்மாவில் ஆன்மாவின் சம்சர்க்காத்தியாசமுண்டாகின்றது. ஆகவே இது சம்சர்க்காத்தியாசமாம். சம்சர்க்கம்—சம்பந்தம்.

அத்தியாசத்தின்றன்மை யறியுமாறு இங்குச் சுருக்கமாகக் கூறப்பட்டது. விரிவா யறிய விருப்புடையோர் விருத்திப்பிரபாகரம் ஏழாவது பிரகாசத்திற் கண்டுகொள்க.

அது தானெனஅறிதல் சீவன்முத்தி.

"ஓ சுவேதகேதுவே! இந்த ஸகலப் பிரபஞ்சமும் அந்தச் சத்தையே ஆதாரமாக வுடையது. அதுதான் சத்தியமானது. அதுதான் ஆத்மா. அது நீயா யிருக்கிறாய் (தத்துவமசி)" என்று சாந்தோக்கியோபநிஷத்தும், "சர்வசுவரூபியாயும் இந்தப் பிரபஞ்சத்திற்கு முக்கிய இருப்பிடமாயும் சூட்சுமத்திலும் அதிசூட்சுமமாயும் நித்தியமாயிருக்கின்ற பரப்பிரமமெதுவோ அது நீ. நீயே அது. ஜாக்கிர சொப்பன சுழுத்தி முதலியவைகளில் எந்தப் பிரபஞ்சம் விளங்கிக்கொண்டிருக்கிறதோ அது பிரமமே. அது நானே என்றறிதலால் சகல பந்தத்திலிருந்தும் விடுபடுகிறான்" என்று கைவல்லியோபநிஷத்தும் கூறுவதால் முப்பத்தைந்து தத்துவங்களையும் சாட்சியாய் நின்றறிகின்ற முப்பத்தாறுந் தத்துவமாகிய அது (கூடஸ்தன்) தானெனன்றறிந்து அதுதானே பிரமமென்று தெளிந்தவனே பிரமதரிசனமுடைய சீவன்முத்தன் என்பது நன்கு விளங்கும்.

அ - கை.

பந்த மோட்சங்களின் காரணத்தைக் கூறல்.

உக:—இப்படிப் பிரமமே தானென்றும், மற்ற முப்பத்தைந்து தத்துவமுந் தனக் கன்னியமென்றும், பிரித்தறியாத அவிவேகிகள் (ஆத்மாநாத்ம விவேகமில்லாத மூடர்கள்) அகங்காரக்கிரந்தியினாலே புத்திரதாராதிகள் தவிக்கின்றதைத் தான் தவிக்கின்றே னென்கின்ற மூடத்தனம் போல இந்த இருபத்தெட்டினுடைய தொழிலையுந் தன் தொழிலென்று மயங்குகின்றபடியினால், இந்த இருபத்

தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட (சம்பாதிக்கப்பட்ட) புண்ணிய பாவங்களினாலும் கட்டுப்பட்டு அந்தக் கன்மத்தின்படியே சனன மரணாதி சமுசாரத்திலே அடிபடுகிறோமென்று மயங்குவன். பிரமசைதன்னியமே தானென்றும் மற்ற முப்பத்தைந்துந் தானல்லவென்றுந் தெளிந்தவிவேகிக்கு அகங்காரக் கிரந்தி யற்றபடியினால் இந்த இருபத்தெட்டினுடைய தொழிலையும் நான் செய்யவில்லையென்றும் இந்த இருபத்தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்கவில்லையென்றுந் திடப்படத்தேறி மயக்க மற்றிருக்கின்றபடியினால், இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டுக் கன்ம மில்லாதபடியினால் சனன மரணாதி சமுசாரமில்லாமல் முத்தனாகிப் பிரமமாத்திரமாகவே யிருப்பன். இவனைச் சீவன்முத்தனென்றும், திடப்பிரஞ்ஞ னென்றும், அதிவர்ணாச்சிரமியென்றும், குணாதீதனென்றும், பகவத் பக்தனென்றும், பிராமணனென்றும் சொல்லுகின்ற இந்த ஆறையுஞ் சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. சகலரும் இந்தத் தத்துவத்தை விசாரம்பண்ணி மோக்ஷ மடையக்கடவர்கள்.

## அகங்காரக்கிரந்தி.

உக.—(சூ-ரை). தானல்லாத வுடம்பைத் தானெனக்கருதுதல் அகங்காரக்கிரந்தியாம். இதுவே, இருதயக்கிரந்தியாம். இது காரணமாகத் தன்னோடியைபில்லாத பொருள் தனதென் றபிமானிக்கப்படுகின்றது. கிரந்தி - முடிச்சு (கட்டு). [அகங்காரக்கிரந்தி - அகங்காரத்தின் கட்டப்பட்டிருத்தலாம்.] கிரந்தி: இருதயக்கிரந்தி, சம்சயக்கிரந்தி, கர்மக்கிரந்தியென மூவகையாமெனக் கூறலுமுண்டு. (1) புத்

தியை ஆத்மாவாக அத்தியாசித்தால் நிச்சயித்திருத்தல் இருதயக் கிரந்தி; (2) ஆத்மா ஏகமா? அநேகமா? சித்தா? சடமா? என்றற் றொடக்கத்தனவாக மயக்கங்கொண்டிருத்தல் சம்சயக்கிரந்தி; சஞ்சி தம் பிராரத்தம் ஆகாமியமென்னும் கர்மங்களை ஆத்மா வுடைத்தா யிருக்கிற தென்றல் கர்மக்கிரந்தி.

## சீவன் முத்தனியல்பு.

"சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன், னின் றது புசிப்பார் வெய்யி னிலவாய்விண் விழுது வீழ்ந்தும், பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா வொன்றும் பாரார், நன்றுதீ தென்னோர் சாட்சி நடுவான சீவன் முத்தர்" என்று கைவல்லியங் கூறுதலால் சீவன்முத்தனியல்பை யறிந்துகொள்க.

## திடப்பிரஞ்ஞன்.

"காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக் கண்ணொழிந் தொருபொரு ளில்லா, மாட்சியை யளிக்க வல்ல"னாகிய குருவினது அனுக்கிரகத்தினால் சமாதி கூடி ஐயந்திரிபின்றிச் சீவப்பிரமங்களி னொருமையை யறிந்து யாதொன்றாலுங் கலங்காது அறிவாகாரமாயி ருப்பவன் திடப்பிரஞ்ஞன். திடப்பிரஞ்ஞை - நிலைத்த அறிவு.

## அதிவர்ணாச்சிரமி.

பிரம க்ஷத்திரியாதி வர்ணத்தை (சாதியை) யும் பிரமசரிய முதலிய ஆசிரமத்தையு (நிலையையு) ம் கடந்துள்ளவன் அதிவர்ணாச் சிரமி. சாதியும் ஆசிரமமும் ஸ்தூலதேகத்தின் கற்பனையாதலானும், சீவன்முத்தன் (அஞ்ஞானிகள் போன்று தேகாகாரமாகாது) அறி வாகாரமாயிருத்தலோடு அதற்குச் சாட்சியாக விளங்குதலானும் அவ னுக்குச் சாதியும் ஆசிரமமு மின்றாயின.

## குணாதீதன்.

நிர்விகற்ப சமாதிவாயிலாகப் பிரகிருதியையொழித்துச் சொரூப மாக விளங்குபவனிடத்துப் பிரகிருதியின் குணங்களான சத்துவாதி

களிருத்தற்கு ஞாயமின்மையினால் அவன் குணாதீதனாம். குணாதீதன் சத்வாதிகுணங்களுக் கப்பாற்பட்டவன். "நேத்திரங்கண்ட மிருதயங்களை ஸ்தானமாகவுடைய சாக்கிர சொப்பன சுழுத்தியாகிய அவஸ்தாத்திரயங்களுக்கு விலட்சணமா (வேறா) யிருப்பதே குணத்திரயங்களைக் கடப்பதாம்" என்று நவநீதசாரம் நிருவாணப் பிரகரணத்திற் கூறுகின்றது. இதுபற்றி விரிவாயறிய விரும்புவோர் பகவத்கீதை 14-வது அத்தியாயத்திற் கண்டுகொள்க.

## பகவத் பக்தன்.

ஒன்றன்கண் பூச்சிய (பூசிக்கத்தக்க) புத்தியோடுண்டாகும் பிரீதி (அன்பு) பக்தியாம். இதனைப் பகவானி (கடவுளி) டத்து வைத்தவன் பகவத்பக்தனாம். இது மனத்தினாற்செய்யும் பக்தி, வாக்கினாற் செய்யும் பத்தி, காயத்தினாற்செய்யும்பக்தி, இலௌகிகபத்தி, வைதிகபத்தி, ஆத்தியாத்மிகபத்தி யெனப் பலவகையாம். ஜீவேசுர பாவங் கழன்று பிரமவடிவாய் நிலைத்துள்ள ஜீவன்முத்தன் சர்வபூதங்களிலும் ஆத்மாவின் (தனது) பகவத்பாவத்தையும் பகவத்வடிவ தன்னிடத்துச் சர்வபூதங்களையும் காண்டலே இங்குப் பகவத்பக்தியாம். பகவத்கீதை 6-வது அத்தியாயத்தில் "(பிரமாமுதல் ஸ்தம்பபரியந்தமுள்ள) சகல வஸ்துக்களிலும் சமமாய்ப் பிரமத்தைப்பார்க்கின்ற தியானயோகத்திலேயே மனதையுடைய யோகியானவன் தன்னைச் சகலவஸ்துக்களினு மிருக்கிறதாகவும் தன்னிடத்திலே சகல வஸ்துக்களுமிருக்கிறதாகவும் பார்க்கிறான்" என்று கூறி யிருத்தலு மிங்கறியத்தக்கது.

## பிராமணன்.

ஞானயோகத்தா.. பிரமத்தை யறிந்து அவ்வடிவாக நிலைத்தவன் பிராமணன். "ஞானியானவன் குடுமியுடன் க்ஷவரஞ்செய்துகொண்டு வெளிப்பூணூலை யெடுத்து விடவேண்டியது. நாசமற்றதாயும் சிரேஷ்டமாயுமிருக்கிற பிரமமெதுவோ அதனைச் சூத்திரமாகப்

(பூணூலாகத்) தரித்துக்கொள்ள வேண்டும். சூசிப்பிக்கிற (குறித்துக் காட்டுகிற) திறலே சூத்திரமென்று சொல்லுகிறார்கள். சூத்திரமென்பது பரமபதம் (உத்தம ஸ்தானமாகிய பிரமம்). எவனால் அந்தச் சூத்திரமானது அறியப்படுகின்றதோ அவன் பிராமணன்'' என்று நாரதபரிவிராஜகோபநிஷத்து மூன்றாவ துபதேசத்திற் கூறுவதிங்குக் கவனிக்கத்தது.

## மோட்சம்.

சர்வதுக்க நிவர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியும் மோட்சத்தின் வடிவமாம். மாயையும் அதன்காரிய வுலகும் சர்வதுக்கமாம். பரமாநந்த வடிவாயிருப்பது பிரமமாம். மோட்சமானது தத்துவ விசாரஞ் செய்வதனால் உண்டாகின்றது. யான்யார்? பிரமமென்பதெத்தகையது? பிரபஞ்சமென்பது எது? என்றிம்மூன்று வஸ்துக்களையும் விசாரித்தல் தான் இக்குத் தத்துவ விசாரமாம். இம்மூன்று தத்துவங்களையும் சற்குரு முன்னிலையில் ஐயந்திரிபற விசாரித்து நானும் பிரமமும் சேதனவடிவம். உலகம் சடவடிவம். மாயோபாதியினால் நான் பிரமத்திற்கு வேறுபட்டவன்போல் தோன்றுகின்றேன். உண்மையில் வேறுபட்டவனல்லன். பிரமத்திற்கு வேறாகாத நான் பரிபூரணமாயிருத்தலால் உலகம் சத்தாகவிராது என்னிடத்துக் கயிற்றின்கண் அரவுபோல் கற்பனையா யிருக்கிறது. கற்பனையாயிருக்கு முலகு அதிஷ்டானமான என்னைவிட்டு வேறாயிராமையால் நானேயுளன்; பிறிதொன்றென்பது காலத்திரயத்திலுமில்லை. சர்வம் மித்தை, சர்வம் பிரமம், சர்வம் நான் என்று திடப்பட வறிந்தவனுக்குத்தா [illegible] மோட்சமுண்டாமென்பது சித்தமாமென்க. சாதன சதுஷ்டயமுடையரா யாவராயிருப்பினும் அவரியாவரும் இத் தத்துவ விசாரம் பண்ணுவதற்குச் சுதந்தரமுடையோராவர். இத் தத்துவ விசாரம் சாதியையும் தேயத்தையும் ஒட்டியிருத்தலில்லை, 'சகலரும் இந்தத் தத்துவத்தை விசாரம்பண்ணி மோட்சமடையக் கடவர்கள்' என்று கூறியிருத்தலி

